பிஸ்மில்லாஹிர் றஹ்மானிர் றஹீம்





# தோத்திரப்பாமாலை

இஃது

ஆற்றங்கரைப் பள்ளிவாசல் செய்குமுகம்மதுஒலியுல்லா

அவர்கள் மீதும்

ஆற்றங்கரை நாச்சியாரென்ற

பாத்திமாநாயகி மீதும்

எறுபாடியில் வாசஞ் செய்யும்

மகாராஜராஜஸ்ரீ

கலீபா க. ப செய்துஅலிசாகிபு

குமாரன்

ஸ்ரீமான் க. ப. அ. முகம்மதுஇஸ்மாகீல் ஹக்கீம்புலவர்

அவர்களாலியற்றப்பட்டு

வெளியிடப்பட்டது.


ஸ்ரீவைகுண்டம்:

ஸ்ரீ கான வித்யா அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பட்டது.

1923

காப்பிகள் 1000 [அணா 2.

பிஸ்மில்லாஹிர் றஹ்மானிர் றஹீம்





# தோத்திரப்பாமாலை



இஃது

ஆற்றங்கரைப் பள்ளிவாசல் செய்குமுகம்மதுஷலியுல்லா

அவர்கள் மீதும்

ஆற்றங்கரை நாச்சியாரென்ற

பாத்திமாநாயகி மீதும்

ஏறுபாடியில் வாசஞ் செய்யும்

மகாராஜராஜஸ்ரீ

கலீபா க. ப. செய்குஅலிசாகிபு

குமாரன்

ஸ்ரீமாந் க. ப. அ. முகம்மதுஇஸ்மாகீல் ஹக்கீம்புலவர்

அவர்களாலியற்றப்பட்டு

வெளியிடப்பட்டது.

ஸ்ரீவைகுண்டம்:

ஸ்ரீ ஞான வித்யா அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பட்டது.

1923

இதன் விலை] காப்பிகள் 1000 [அணா 2.

# சாத்துக்கவி.

இஃது

மேலைச்செவல் பு. பாவாசாகிபுராவுத்தர் குமாரரும்
சிறுவெண்பாப்புலிப்பா வலருமான ஸ்ரீமான் பாவாமுஹியத்தீன்
புலவரவர்களால் இயற்றப்பெற்றது.]

## விருத்தம்.

தண்டாள வடிவாமுகம்மது நருலின்று
திருமறைப்பொருளுணர்ந்த

சாதுசற்குண முகம்மதுமதிநிறைவென்ற
சாகிபின் சீடருக

வண்டடைலை ஆழேறா பாடியாம் பதிமீது
வாழுநற் செய்கவிக்கு

மைந்தனு முத்தமிழிலக்கண விலக்கியம்
வழுவறவுணர்ந்து நித்தன்

அண்டமீனாய மதுரகவி பாடுமதி செய்கட்டுரை
காதிரு காவற்குக்

கனதவச்சீடனுமான் மாவினொடு சகல
கலை புணருமதி வல்லவன்

மண்டலந்துதி செய்முகம்மதி சுமாலினை
மருவு மாட்றக்கரையிலே

வளரவுலியாமீது தோத்திரக்கவியிசை
மவுன்முனிஸ்ப்புகழவே.

---



பிஸ்மில்லா ஹிர்றஹ்மானிர்றஹீம்.

# தோத்திரப் பாமாலை.

வெண்பா.

நீருடுத்த மாநிலத்தி னோர்ந்தசங்கனை புரத்தி
லேருடுத்த நட்டாற்றி னெல்லையிற்—பேருடுத்த
செயகு முகம்மதொலி சீர்ச்சரிதை பாடவெற்குக்
கைதவத்தை நீக்குமிறை காப்பு

இன்னிசை.

அருவுருவாய் நிட்களமாயாதி யந்தமில்லாத
நிருபலன் மனுப்பயிர்க்கு நீணிலத்திலே தினமுங்
கருணை மழை சொரியக் காசினியில் வந்துதித்த
திருவல்வு மாற்றங்களை செய்கு முகம்மதொலியே

தங்கள் தறுகாவைச்சார்ந்தத் தோப்பினிலே
தொங்கும் பழக்குலையைத் துணிக்கொருவன் றன்பறித்துப்
பங்கப்படுத்தியதால் பழுக்காதிருக்கச்செய்தீர்
திங்களொளி போலிலங்கும் செய்கு முகம்மதொலியே

நெய்யை வழியில் வைத்து நினைவயர்ந்தாங்கள் தறுகா
வையடுத்த சேயிழைக்கு மறந்ததுணர் வுண்டாகித்
தையலவள் மீண்டுவரச்சர்ப்ப மொன்றையவ்விடத்தே
செய்யவினைக் காக்கச்செய்த செய்கு முகம்மதொலியே

## ஆற்றங்கரை நாச்சியார்பேரில்

### வெண்பா,

முப்புவனமும் போற்ற முக்கியமாற் காரணக்க
ளொப்புப்படிக்கியற்று மொண்டொடியார்—செப்புநம்பி
யாற்றங்கரை நாச்சியார்மீது பாவிசைக்க
காற்றைப் படைத்த விறைகாப்பு

### கண்ணிகள்,

சோதியிறை யோனருளால் தொல்லுலகின் மானிடர்க்கு
ஆதரவாய் வந்துதித்த ஆற்றங்கரை நாயகியே

நாலுபுறமாறோட நடுநிலையிலே சிறந்த
ஆலயத்தில் வீற்றிருக்கும் ஆற்றங்கரை நாயகியே

உள்ளக் குறைகாண ஒளிநடனித்திடமதாய்
அன்பருக்குக் காட்டுமதி ஆற்றங்கரை நாயகியே

எண்ணிறந்த பேர்களிருதயத்தி லொட்டப்படி
அன்னமதைகொடுக்கும் ஆற்றங்கரை நாயகியே

தங்கமணி ஆலயத்தின் சார்ந்த திருமேவர்
அங்கந்தனை மறைத்த ஆற்றங்கரை நாயகியே

இன்பசுகந்தன்னை ஏற்பவருக்கீந்துமதி
அன்பருளந்தோறுறைய ஆற்றங்கரை நாயகியே

மட்டிலடங்காத வொருவல்லான் சீர்பெற்றதிறல்
அட்டதிக்கும் போற்றுமய ஆற்றங்கரை நாயகியே

கற்பகதருப்போலே காசினியில் வந்துதித்த
அற்புதத்தின் ரூபமே ஆற்றங்கரை நாயகியே

தங்கள் தருணமைச்சார்ந்தோர் தனின்றயரை
அங்ஙனகற்றிவிடும் ஆற்றங்கரை நாயகியே

தீராத வன்பிணிகள் செய்வினைகள் சூனியங்கள்
ஆரார்க்குந் தீர்த்தருளும் ஆற்றங்கரை நாயகியே

என்போலப் பாவியர்க ளெத்தனையோ பேர்களுக்கு
அன்பாய்க் கிருபைசெய்த ஆற்றங்கரை நாயகியே

வந்து வந்து மானிடர்கள் வழுத்துமவு ஷதோசை
அந்தி பகலாய் விளங்கும் ஆற்றங்கரை நாயகியே

கடிவிசங்கள் காய்ச்சல் கழிச்சல் முதலானதுங்கள்
அடியினை கண்டோடிவிடும் ஆற்றங்கரை நாயகியே

பண்டுசெய்த தீவினைகள் பலபிணிகள் தங்களிடம்
அண்டினவர்க் கோடிவிடும் ஆற்றங்கரை நாயகியே

அல்லும் பகலு முங்களாதரவை நாடியவர்
அல்லல் பெறுவதுண்டோ ஆற்றங்கரை நாயகியே

அன்னையே யுங்கள் திருவரண்மனையில் வந்தோர்க்கு
அன்னக் குறைவுமுண்டோ ஆற்றங்கரை நாயகியே

பத்தினியே தாயே பலன்கொடுக்கு மாதரசே
அத்து விதத்துட் பொருந்தும் ஆற்றங்கரை நாயகியே

மங்கா மணிச்சுடரே மாசில்லா மாமறியே
அங்காதி பாதங்கமற் ஆற்றங்கரை நாயகியே

தொண்டுசெய்யும் பேர்களுக்குத் தொல்லுலகில் வறுமை
அண்டாம லோட்டிவிடும் ஆற்றங்கரை நாயகியே

தாசனுங்கள் காரணத்திற்றான் சிறிது சொற்களிவை
ஆசையிகவே பொருந்தும ஆற்றங்கரை நாயகியே

பொல்லாத வம்பனைப்போற் புலம்பித்திரியாதடிமை
அல்லறச் செய்தாலும் ஆற்றங்கரை நாயகியே

எண்கிளைஞர் நன்பரோடு மெல்லவர்க்கு நற்கருணை
அன்புகொண்டு தந்தாளும் ஆற்றங்கரை நாயகியே

படிமீதிலுன் புகழைப் பாவாலிசைத்திறஞ்சும்
அடியனெனைக் காக்குகவே ஆற்றங்கரை நாயகியே

முறைவழியில்லாக இந்த முகம்மதிஸ்மாயி லென்பால்
அறிவுமிக வழங்கும் ஆற்றங்கரை நாயகியே

முற்றிற்று.

---

பைத்து.

---

லாஇலாக இல்லல்லாகு லாஇலாக இல்லல்லாகு
லாஇலாக இல்லல்லாகு முகம்மதுற்ற சூலுல்லா

---

ஹாஷிமாக்குலத்தில் வந்த காரண நபிபெறும்
ஆசைச்செல்வி நாமங்கொண்ட ஆற்றங்கரை நாயகி

கன்னல் மாதளை வருக்கைக் கதலி வாழைச்சோலைசூழ்
கன்னயஞ்சேராற்றங்கரை நாயகியே பாத்திமா

கருத்திற்பூண்ட கவலையின் கலகத்தோடு வந்தவர்
வருத்தத்தோடு மீண்டதுண்டோ மாதரசே பாத்திமா

அல்லலோடு வந்து நித்தமடியில் வீழுமாக்கற்கு
அல்லும் பகலுங் கிருபை செய்யும் ஆற்றங்கரை நாயகி

பேய்ப்பிடித்துத் துன்பமுற்ற பேதைமார்கள் தங்களை
ஆயைப்போலே யாதரிக்கும் ஆற்றங்கரை நாயகி

